# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்     நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 35 திருவள்ளுவர் ஆண்டு 2054 ஏப்ரல் –2023

## உள்ளே...


- நடைமுறைத் தமிழையாவது பேசுங்கள்!
- திராவிடத் தமிழும் இலத்தீனியப் பிரெஞ்சும்
- Tracing the Trajectory of Linguistic changes in Tamil: Mining the corpus of Tamil Texts
- இயக்ககச் செயற்பாடுகள்!
- பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!










# நெடுஞ்சாலைத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Arch bridge | – | வளைவுப்பாலம் |
| Arch rise | – | வளைவு உயரம் |
| Bending moment | – | வளைசுழல் திறன் |
| Boundary stone | – | எல்லைக்கல் |
| Bridge lift | – | தூக்குப் பாலம் |
| Bypass road | – | புறவழிச்சாலை |
| Carriageway marking | – | ஊர்திப்பாதை குறியிடல் |
| Cautionary sign | – | எச்சரிக்கை அறிகுறி |
| Circumferential road | – | சுற்றுச் சாலை |
| Concentration traffic | – | ஊர்திச் செறிவு/ ஊர்தி நெரிசல் |
| Concrete road | – | கற்கலவைச் சாலை |
| Crawler track | – | ஊர்ந்து செல்லும் பாதை |
| Cycle track | – | மிதிவண்டிப் பாதை |
| Foot bridge | – | நடைபாலம் |
| Foot path | – | நடைபாதை |
| Ghat road | – | மலைச் சாலை |
| Gravel road | – | சரளை மண் சாலை |
| Hairpin bend | – | கொண்டையூசி வளைவு |
| Laybye | – | ஒதுங்கு சாலை |
| Major road | – | பெரிய சாலை |
| Median strip | – | நண் கட்டைச்சுவர் |
| cause way bridge | – | தரைப்பாலம் |
| covered way | – | மூடிய வழி |
| Suspension bridge | – | தொங்குப் பாலம் |
| Fly over | – | மேம்பாலம் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 மீனம் (பங்குனி)

ஏப்பிரல் – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கஸ்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

ஆசிரியர் உரை

# நடைமுறைத் தமிழையாவது பேசுங்கள்!

உலக மக்கள் அவரவர் தாய்மொழியை நேசிக்க வேண்டும். காலமாற்றம் அனைத்தையும் மாற்றட்டும். தாய்மொழியை மறக்க நாம் அதனைக் காரணம் காட்டக் கூடாது. தொன்மை, முன்மை, மேன்மை, எண்மை, ஒண்மை, வண்மை, வாய்மை, தூய்மை, செம்மை, மும்மை, தனிமை, இனிமை, பெருமை, திருமை, இயன்மை, வியன்மை என நம் தாய்மொழியாகிய தமிழுக்கு 16 சிறப்புகள் உண்டு. இத்தகு பெருமை மிகு தமிழ்மொழி எப்போது தோன்றியது என்ற கேள்வி எழும் எனக் காத்திருந்தவர் போல் அன்றே ஒரு கவி வரைந்தார் மகாகவி பாரதி.

**தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு**

**சூழ்கலை வாணர்களும் – இவள்**

**என்று பிறந்தவள் என்றுணராத**

**இயல்பினளாம் எங்கள் தாய்!**

தேனின் சுவை போன்றது செந்தமிழின் சுவை என ஆன்றமைந்த சான்றோர்கள் வாழ்ந்து வழிகாட்டிய இத்திருநாட்டில் இன்றைய பிள்ளைகள் பேசும் தமிழைக் கேட்க நேரும்போது மனம் பெரும் அச்சம் கொள்கிறது.

Morning எழுந்து, brush பண்ணி, walk பண்ணி, bath பண்ணி எனத் தொடரும் day call பண்ணி, mail பண்ணி, work பண்ணி so tired என முடிகிறது. இப்படிப் பேசினால் என்ன பயன் விளையும்? இவ்விதம் தாய்மொழியுடன் பிறமொழி கலந்து பேசுதல் மொழிக்கு நாம் இழைக்கும் பெருங்கேடு. தமிழ்மொழி பேசும் போது ஆங்கிலம் கலக்கும் நாம் ஆங்கிலம் பேசும்போது ஏன் தமிழ் கலப்பது இல்லை? ஏன் இந்த மனப்போக்கு?

நாம் அனைவரும் ஒன்றைச் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளோம். மொழிப்பற்று. இல்லத்திலிருந்து தொடங்க வேண்டும். Dad, Mom எனக் கூறும் குழந்தைகளுக்கு அப்பா, அம்மா என்று அழகான, உணர்வான, உயிரான சொற்களைக் கூறி நாம் பழக்க வேண்டும்.

ஆங்கிலம் ஒரு மொழி ; அது அறிவன்று. எம்மொழியையும் கற்றுத் தேர் என்றான்பாரதி. தேர்ந்த பின் யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம் என்ற உறுதிப்பாட்டைக் கூறினார்.

- data, day, date, eat, egg, finish, good, great, group, hang, happy, just, key, lost, love, money, month, normal, place,........... (பணி சார்ந்து பயன்படுத்தும் சொற்கள்)
- dad, mam, bro, sis, aunty, uncle, grandma . ............ (உறவு சார்ந்து பயன்படுத்தும் சொற்கள்)
- rice, water, juice, ice–cream, milk, cool drinks, fruit salad, tea, coffee ........... (உணவு சார்ந்து பயன்படுத்தும் சொற்கள்)

ஒருவருக்கு அடிப்படைத் தேவைகளாக இருப்பன உணவு, உடை, உறையுள். இவற்றிலேயே ஐம்பது விழுக்காட்டிற்கும் மேல் ஆங்கிலப் பயன்பாட்டைக் கொண்டிருந்தால் தாய்மொழி எவ்விதம் வளம் பெறும்? எவ்விதம் நலம் பெறும்? பள்ளியில் படிக்கும் மாணவர்கள்கூட எனக்குத் தமிழ் வராது என்பதும், என் பிள்ளைக்கு ஆங்கிலம் அளவுக்குத் தமிழ் தெரியாது என்பதைப் பெருமையுடன் கூறும் பெற்றோரும் உள்ள வரை தாய்மொழி எப்படி இவர்களிடம் தப்பிப் பிழைக்கும்? காலத்தின் கட்டாயம் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துகிறோம். ஆனால், அதில் உறவுகளை அழைத்தல் ஏற்புடையதன்று. அம்மா, அப்பா, அண்ணன், அக்கா, அத்தை என நாம் பயன்படுத்தும் சொற்களில் பெரும்பான்மை "அ"வில் தொடங்குவது தமிழின் சிறப்பு. நமது மூக்குத் துளையின் இடப்புறம் ஓடுகின்ற மூச்சு அகாரம் என்று கூறப்படும். இடகலை அதிர்வு நிலை அகாரம் . அ என்ற எழுத்து இடகலை நாடி இடது கண் பார்வையோடு பொருந்தியது. வாயைத் திறந்தாலே அ ஒலிப்பு நம்மை புத்துணர்ச்சியுடன் நீடிக்கச் செய்கிறது என்பதை ஆராய்ச்சிகள் கூறுகின்றன. அந்த அன்புணர்வு நம் மொழி வாயிலாக வெளிப்படட்டுமே. I like you Dad என்பதை விட I like you Appa மேல் அல்லவா! பிற மொழிகள் கற்றால் மட்டுமே அம்மொழியின் சிறந்த நூல்களை நம் தாய்மொழியாம் தமிழில் மொழிபெயர்த்து உணரவும் உலகுக்கு அளிக்கவும் முடியும். தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும் என்ற பாரதி,

**"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**

**தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்"** என்றார்.

போர்த்துக்கீசியம், பாரசீகம், சமற்கிருதம், ஆங்கிலம் எனப் பிறமொழிச் சொற்கள் வாணிகத்தில் தொடங்கி பண்பாட்டில் பரவின. முத்தமிழ் அறிஞர்களால் முன்னெடுக்கப்பட்ட பல்வேறு தமிழியக்கங்கள் தனித்தமிழ் பயன்பாட்டை வழக்கத்திற்குக் கொண்டு வந்தன. எடுத்துக்காட்டாக: **வருஷம், மாதம், வாரம், தினம்,**

**தேதி** என்ற வடசொற்களை ஆண்டு, **திங்கள், கிழமை, நாள், நாள் எண்** என்று தமிழ்ப்படுத்தின. கிழமைப் பெயர்களிலும் புதன், சனி ஆகியவற்றை, **அறிவன், காரி** என்றனர். **ஜன்னல்** – போர்த்துக்கீசியச்சொல். ஜன்னலுக்கு நிகரான தமிழ்ச் சொல் **காலதர்** . கால் – காற்று, அதர் – வழி – காற்று வரும் வழி.

**மான்கண் காலதர் மாளிகை** – சிலம்பு

இயன்ற வரை பேச்சிலும், எழுத்திலும் பிறமொழிச் சொற்களைத் தவிர்த்தல் நல்லது. பன்மொழிச் சொற்களைக் கலந்து பேசுவது மொழிக்கு நல்லதல்ல. அது நமக்குப் பெருமையும் அல்ல. **கலப்படம்** என்பது எதில் நடந்தாலும் அது தவறுதான். வெவ்வேறு நாடுகளில், மாநிலங்களில் வாழும் பிறமொழி மக்கள் எங்கேனும் ஒன்று கூடினால் தம் தாய்மொழியில் பேசத் தொடங்கி விடுகின்றனர். அதில் அவர்களுக்கு அப்படியொரு இன்பம். ஆனால், தமிழர்களாகவே இருந்தாலும் ஆங்கிலம் தெரிந்தவர்களாக இருந்தால் ஆங்கிலத்தில் உரையாடுகின்றனர். பிறமொழி பேசும் மக்களிடமான செம்மையான உணர்வு நம்மிடம் இல்லாதது ஏன்?

ஒரு மொழியுடன் மற்றொரு மொழியைக் கலந்து பேசுதல் என்பது **மிளகில் பப்பாளி விதைகளைக்** கலப்பது போலாகும். நாளடைவில் எது மிளகு? எது பப்பாளி விதை? என்று நமக்கே தெரியாமல் போகும். இந்நிலையிலிருந்து பரிதிமாற் கலைஞர், தேவநேயப் பாவாணர், திரு. வி.க. முதலிய பல தமிழறிஞர்கள் பெரும் முயற்சி செய்து தனித்தமிழ் இயக்கத்தின் மூலம் தமிழை மீட்டெடுத்தனர். எத்தனை மொழிகள் கற்றாலும் அம்மொழி பேசும்போது பிறமொழி கலப்பின்றிப் பேச வேண்டும். அதுவே நாம் மொழிக்குச் செய்யும் தொண்டு.

மக்களை விட்டு மொழியும் மொழியை விட்டு மக்களும் உயிர் வாழ்தல் இயலாது என்றார் மறைமலையடிகள். ஒரு மொழியின் வாழ்வும் வளர்ச்சியும் அம்மொழி பேசும் மக்களின் வாழ்வோடு இணைந்துள்ளது. தமிழ்மொழி எம்மொழிக்கும் தாழ்ந்தும் வளைந்தும் போகாமல் தலை நிமிர்ந்து தனித்தியங்கும் ஆற்றலுடையது என்கிறார் கால்டுவெல்.

பேசப்படும் நல்மொழியே உலகில் பெருமை கொண்டு வாழும். எனவே, தமிழ் மொழியில் குழந்தைகளிடம் பேசுவோம். இல்ல மொழியாகப் பயன்படுத்துவோம். குழந்தைகளுக்குச் சமயம் எதுவாயினும் தனித்தமிழில் பெயர் சூட்டுவோம்.

தமிழர் என்று அடையாளம் காட்டுவோம். வணங்கும் கடவுளைத் தமிழில் வழிபடுவோம்.

**தமிழன் என்றோர் இனமுண்டு**

**தனியே அவர்க்கோர் குணமுண்டு**

**அமிழ்தம் அவனது மொழியாகும்**

**அன்பே அவனது வழியாகும்**

என்ற நாமக்கல் கவிஞரின் வரிகளை மனத்திலும் செயலிலும் ஏற்போம். குறைந்தளவு நடைமுறைத் தமிழையாவது நாள்தோறும் பயன்படுத்துவோம். ஆசறு முறைப்படி அருந்தமிழ் பேசி அயல்மொழி விலக்கித் தனித்தமிழ் வளர்ப்போம். தாய்மொழியை பேசுவோம். தாய்மொழியை நேசிப்போம். பிற மொழியை இகழாமல் நம் மொழியைப் புகழ்வோம். தமிழ்மொழியின் பெருமையை உயிர்மூச்சாய் நேசிப்போம். நம் பெருமையை நாம் அறிதலே வரலாறு நிலைக்க வழி. நிற்க..

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன். ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பண்பாடு எதிர்ப்பண்பாடு பண்பாட்டுப் பன்மை" என்னும் பொருண்மையிலான கட்டுரையின் தொடர்ச்சியும், பென்சில்வேனியா பல்கலைக்கழகப் பேராசிரியர் வாசு ரெங்கநாதன் அவர்களின், "Tracing the Trajectory of Linguistic changes in Tamil: Mining the corpus of Tamil Texts' என்னும் ஆங்கிலக் கட்டுரையின் தொடர்ச்சியும், இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன். இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட இணையவழிப் பயிலரங்கில் வாழ்த்துரை வழங்கிய மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் மரு. மு.செம்மல் அவர்களுக்கும், 80ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த இலங்கை யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை மேனாள் தலைவர் பேரா. சி. சிவலிங்ராஜா, அகராதியியல் அறிஞர் பேரா. முனைவர் ச. சச்சிதானந்தம், சென்னை – மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச்சங்க நிறுவனச் செயலாளர் கலைமாமணி முனைவர் சேயோன் ஆகியோருக்கும் என் அன்பு நன்றிகள். பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன். தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# திராவிடத் தமிழும் இலத்தீனியப் பிரெஞ்சும்



சென்ற இதழின் தொடர்ச்சி...


முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு


## ஒத்த பழமொழி

காதலுக்குக் கண் இல்லை. L'amour est aveugle.

கத்தி எடுத்தவன் கத்தியால் சாவான். Quiconque se sert de l'épée périra par l'épée..

## மரபுத் தொடர்

சோறு போடும் வேலை. Un gagne –pain.

மூளைச் சலவை. Un lavage de cerveau

## இலக்கணம் – La grammaire

ஒரு மொழியில் உள்ள எந்த ஒரு சொல்லும் இலக்கணப் பகுப்புக்கு உரியது. சொற்கள் வாக்கியங்களில் புரியும் இலக்கணத் தொழில்களுக்கேற்ப பாகுபடுத்தப்பட்டுள்ளன. இலக்கணத்தைப் பிரெஞ்சில் la grammaire என அழைப்பர். இது grammatica என்கிற இலத்தீன் சொல்வழி வந்தது. பிரெஞ்சு இலக்கணமும் இலத்தீன் இலக்கணத்தின் தழுவலே. இங்கிலாந்தில் பிரெஞ்சு ஆட்சிக் காலததில், பிரெஞ்சு இலக்கணம் முதன்முதல் John Palsgrave எனும் ஆங்கிலேய இலக்கணியினால் 1553 ஆம் ஆண்டில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டது. பிரெஞ்சுமொழியில் பின்னர் தான் எழுதப்பட்டது. பிரான்சில் 17 ஆம் நூற்றாண்டில் Port Royal இலக்கணிகள் Grammaire générale à raisonner நூலை வெளியிட்டனர். காலத்திற்குக் காலம் பல அறிஞர்கள் தொடர்ந்து சில இலக்கணங்களை எழுதியும் வெளியிட்டும் வந்தனர். ஆயினும் 1936 இல் Maurice Grevisse எனும் பெல்ஜிய பிரெஞ்சு இலக்கணி எழுதிய பல புத்தகங்களில் Le bon usage என்ற பெரிய இலக்கணப் பெட்டகம் பெரும் புகழ் பெற்றது. இத்தாலியரான வீரமாமுனிவர் இந்தியாவில் 18ஆம் நூற்றாண்டில் தமிழ் – பிரெஞ்சு மொழிகளின் இருமொழி இலக்கண ஒப்பீட்டு நூலை யாத்தார்.

இலக்கணப்பாகுபாடு சொல்லிலக்கணம் – Parties du discours எனப்படும். அடிப்படையில், தமிழில் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்கு வகையாகவும், பிரெஞ்சில் பெயர்ச்சொல் – le nom, சார்புச்சொல் – l'article, பதிலிடுபெயர் – le pronom, ngauil – l'adjectif, வினைச்சொல் – le verbe, வினையடை – l'adverbe, முன்னிடைச்சொல் – la préposition, கூட்டிடைச்சொல் – la conjonction என எட்டு வகையாகவும் பாகுபடுத்தப்பட்டுள்ளன. தமிழுக்குப் புதிய இலக்கணம் எழுதிய தமிழியலறிஞர் அகத்தியலிங்கனார் தமிழில் காணப்படும் சொற்களைப் பெயர்ச்சொல், வினைச்சொல், பெயரடை, வினையடை, இடைச்சொல் என்று ஐந்து வகையாகப் பிரிக்கலாம் எனத் தமிழ்மொழி அமைப்பியல் நூலின்கண் கூறுகிறார். எண்இலக்கணம் – le nombre, பால்இலக்கணம் – le nombre, மூவிட இலக்கணம் – la personne, கால இலக்கணம் – le temps ஆகியன இருமொழிகளிலும் உள்ளன.

பிரெஞ்சு இலக்கண விதிமுறைகள் புறநடைகளை அதிகம் கொண்டுள்ளது. இம்மொழியில் பால் இலக்கணம் தனித்துவமானது. உயிருள்ளனவற்றின் ஆண் – பெண் பாகுபாடு மொழிகளில் இயற்கையானது. ஆனால் பிரெஞ்சில் உயிரற்றவற்றினதும் அஃறிணையினதும் உணர்ச்சிகளினதும் 'பால் பாகுபாடு செயற்கையானது. எடுத்துக்காட்டாக : வீடு– une maison, தண்ணீர்– l'eau, சந்திரன் – la lune, அழகு – la beauté, மொழி – la langue போன்றன பெண்பாலாகவும், புத்தகம் – un livre, பணம்– l'argent, சூரியன் – le soleil, அன்பு – l'amour, நாடு – un pays போன்றன ஆண்பாலாகவும் கொள்ளப்படுகின்றன. un, le, l' ஆகியன ஆண்பாலையும் une, la, l' ஆகியன பெண்பாலையும் சுட்டுகின்றன. இவ்வாறு தமிழிலும் மொழி, நாடு, பூமி, நித்திரை

முதலானவை பெண்பாலாகவும் சூரியன், நெருப்பு, கோபம், காற்று முதலானவை ஆண்பாலாகவும் கொள்ளப்படுவது உண்டு.

பிரெஞ்சில் பெயர்ச் சொல்லைக் குறிப்பிடும் கால், அது ஆணா அல்லது பெண்ணா எனப் பால்வேறுபாடு உணர்த்தும் சார்புச் சொல்லுடனேயே கையாளப்படல்வேண்டும். பெயர்ச்சொல்லின் எண், பாலைப் பொறுத்துப் பெயரடை, வினை என்பன மாறும் தன்மை உடையது. பிரெஞ்சில் படர்க்கையில் உயர்திணைக்கும் அஃறிணைக்கும் ஒரே பதிலிடு பெயர்கள் உள்ளன: il– அவன். அது, elle – அவள். அது. முறையே இருதிணைகளுக்கும் ஆண்பால் பன்மை ils – அவர்கள், அவை, பெண்பால் பன்மை elles – அவர்கள் அவை. தமிழின் அவர்கள், அவை பால்காட்டுவதில்லை, ஆனால் பிரெஞ்சில் ils, elles ஆகியன – பால்காட்டுகின்றன. உயர்வு ஒருமையான அவர் என்பதற்குத் தனியான பதம் இல்லை. – பெண் பகுப்பைக் காட்டுவதில்லை. தமிழிலும் இலத்தீனிலும் வேற்றுமைக்கு முக்கியத்துவம் உண்டு. ஆனால் மகளான தமிழில் அது என்ற அஃறிணைச்சொல் ஆண் பிரெஞ்சில் வேற்றுமை உருபுகளின் இடத்தை முன்னிடைச்சொற்கள் ஈடுசெய்கின்றன. பிரெஞ்சில் வினைச்சொல் சொல்லரசனாக விளங்குகிறது. இருமொழிகளிலும் வினையானது எழுவாயின் எண், பால், மூவிடம், காலம் ஆகியவற்றிற்கேற்பப் பலமாற்றங்களைக் கொள்கிறது. தமிழில் காலங்கள் ஒழுங்காக இருப்பது போல் பிரெஞ்சில் ஒழுங்காக இல்லை. பிரெஞ்சு வினைச்சொல் ஒன்று 252 திரிபுகளை அடைகிறது. வினைத்திரிபு பிரெஞ்சில் சிக்கலான அமைப்புடையது.

Julien Vincent எனும் பிரெஞ்சிய இலக்கணி 1878இல் திராவிட மொழிகளின் வினையமைப்பியல் என்ற மொழிநூலை உருவாக்கினார். 1889 இல் தமிழ் இலக்கணம் Martinet என்னும் பிரெஞ்சியரால் பிரெஞ்சில் எழுதப்பட்டிருக்கிறது. 1892 இல் தமிழ் – பிரெஞ்சு இலக்கண நூலொன்றை M.J.Baulez என்னும் பிரெஞ்சிய பாதிரியார் எழுதியிருக்கிறார். சில பிரெஞ்சியலறிஞர்கள் தமிழ் – பிரெஞ்சு, பிரெஞ்சு – தமிழ் அகராதிகள் எழுதியிருக்கிறார்கள். அவர்களில் Musset, Dupuis என்னும் பிரெஞ்சிய பாதிரியார்கள் சிறப்பிடம் பெறுகிறார்கள். பிரான்சில் வாழும் சதாசிவம் சச்சிதானந்தம் ஆகிய நானும் தமிழர்கள் பிரெஞ்சு இலக்கணம் கற்றுக்கொள்வதற்காக ஐந்து இலக்கணநூல்களும், பிரெஞ்சு – தமிழ் அகராதிகள் எட்டும் எழுதியிருக்கிறேன். ஆங்கிலம் – பிரெஞ்சு மொழிகளின் ஒப்பீட்டுக் கற்கை எனும் எனது மும்மொழிநூல் மொழியியல் பேரறிஞர். ச. அகத்தியலிங்கனார் அவர்களின் உயரிய அணிந்துரையை 2005 இல் பெற்ற பெருமையை உடையது.

| இலத்தீன் - amar | பிரெஞ்சு - aimer | தமிழ் - நேசித்தல் |
|---|---|---|
| amo | J' aime | (நான்) நேசிக்கிறேன். |
| amas | tu aimes | (நீ) நேசிக்கிறாய் |
| amat | il aime | (அவன்) நேசிக்கிறான்.. |
| amamus | nous aimons | (நாங்கள்) நேசிக்கிறோம். |
| amatis | vous aimez | (நீங்கள்) நேசிக்கிறீர்கள். |
| amant | ils aiment | (அவர்கள்/அவை) நேசிக்கிறார்கள்/நேசிக்கின்றன. |

## வாக்கியம் – La phrase

மொழிகளில் வாக்கிய அமைப்புகள் எழுவாய் – sujet (S) + செயப்படுபொருள் – objet (O) + பயனிலை (வினை) – verbe (V) என்ற ஒழுங்கில் அல்லது எழுவாய் – sujet(S)+ பயனிலை(வினை) – verbe (V) + செயப்படுபொருள் – objet (O) என்ற ஒழுங்கில் அமைகிறது. தமிழ் வாக்கிய அமைப்பு முதலாவது ஒழுங்கிலும், பிரெஞ்சு வாக்கியஅமைப்பு இரண்டாவது ஒழுங்கிலும் அமைகின்றன. இவ்விருமொழிகளிலும் எழுவாய் – பயனிலை இயைபு பிறழாமல் வாக்கியங்கள் உள்ளன.

| தமிழ் வாக்கிய அமைப்பு | பிரெஞ்சு வாக்கிய அமைப்பு |
|---|---|
| நான் தமிழ் பேசுகிறேன்.<br>(S) + (O) + (V) | நான் பேசுகிறேன் பிரெஞ்சு.<br>(S) + (V) + (O) |

## இலக்கியம் – La littérature :

வளர்ந்து தமிழிலக்கியம் தனிப்பாடல்களில் தொடங்கி காப்பியம், பக்தி, கவிதை என பின்னர் உரைநடையாகி நாடகத்துறையிலும் உயர்ச்சி அடைந்தது. புதினம், சிறுகதை என எழுச்சி பெற்றது. ஆரம்பகாலம் தொட்டு கம்பனின் மொழி இலக்கணமும் இலக்கியமும் சமஸ்கிருதத்தின் ஊடுருவலுக்கு இரையானது போல் விக்தோர் இயூகோவின் மொழி இலக்கணம், இலக்கியத்தில் இலத்தீனின் ஊடுருவல் பின்னிப்பிணைந்து உள்ளது. இதன் விளைவாக 16 ஆம் நூற்றாண்டில் Joachim de Bellay எனும் புலவர் இலத்தீனை விடுத்து பிரெஞ்சில் எழுதுமாறு புலவர்களை, அறிஞர்களை வேண்டினார்.

சங்கநூல்களுக்குப் பின் வந்த ஆரம்பகாலப் படைப்புகளில் இந்து மதத்தினதும் ஆரியப்பண்பாட்டினதும் ஆக்கிரமிப்பு அத்துவிதமாகக் கலந்திருந்தது. இவ்வாறே தொடக்கக்காலப் பிரெஞ்சிய இலக்கியப் படைப்புகளிலும் சிலுவை யுத்தம், நிலப்பிரபுத்துவ முறை, நூற்றாண்டுப்போர் ஆகியன பற்றி எடுத்தியம்பப்பட்டது. தொடக்கக்கால இலக்கியங்கள் பதினோராம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாம் நூற்றாண்டு காலப்பகுதிகளில் தோன்றின. ஆரம்பத்தில் தோன்றியவை மன்னர்களின் வீரப்பிரதாபங்களை Chanson de geste எனும் வடிவில் கூறுவதாக இருந்தன. பன்னிரண்டாம் நூற்றாண்டில் மத்தியகாலப் பகுதிகளில் காதலை – காமத்தை மையப் பொருளாக வைத்து மென் இலக்கியங்கள் தோன்றின. இவற்றில் Les troubadours சிறப்பு வாய்ந்தது. தொடக்கக்கால ஆக்கங்களில் La chanson de Roland (1100), Tristan et Iseut (1200) என்பன முக்கியமானவை. பதினாறாம் நூற்றாண்டில் எழுச்சி பெற்று பதினேழாம் நூற்றாண்டிலிருந்து உன்னத வளர்ச்சி அடைந்து இன்று வரை ஏற்றம் பெற்றிருக்கிறது.

பிரெஞ்சிய இலக்கியத்தை வளர்த்தவர்களில் Ronsard, Rabelais, Montaigne, Corneille, Racine, Molière, de la Fontaine, Boileau, Voltaire, Emile Zola, Chateaubriand, Victor Hugo,Balzac, Georges Sand, Flaubert, Maupassant, Anatole France, Albert Camus,Yourcenar போன்ற பலர் வரலாற்றில் அழியா இடம்பெற்றவர்கள். தமிழிலுள்ள பஞ்ச தந்திரக்கதைகளை மிக ஒத்த புனைகதைகள் பிரெஞ்சிலும் உண்டு. காகமும் நரியும், கொக்கும் நரியும், நரியும் திராட்சைப்பழமும், முயலும் ஆமையும், ஓநாயும் ஆட்டுக்குட்டியும், உழைப்பாளி தந்தையும் பிள்ளைகளும், கழுதை விற்கச்சென்ற தகப்பனும் மகனும் எனப் பல கதைகள் ஒத்தமாதிரி உள்ளன. உதாரணமாக: தமிழ்க்காகத்தின் வாயில் வடையும், பிரெஞ்சுக்காகத்தின் வாயில் பாற்கட்டியும் இருக்கும். இவ்வாறே பேராசை பெருந்தரித்திரம் என்ற கதையில், கதை மாந்தராகத் தமிழில் பிச்சைக்காரனும், பிரெஞ்சில் பாற்காரியும் வருகின்றனர். பிரெஞ்சு இலக்கியப் படைப்புகளுக்காக ஆறு இலக்கியப் பரிசுகள் பிரான்சில் வழங்கப்படுகின்றன. பிரெஞ்சுமொழிப் படைப்புகளுக்கு இதுவரை பன்னிரண்டு நோபல் பரிசுகள் கிடைத்திருக்கின்றன.

இருமொழிகளும் இலக்கியக் கொண்டு கொடுப்பனவுகள் பரிமாறியிருக்கின்றன. ஈஏரியல் என்பவர் திருக்குறளை 1767 இலும், பேரறிஞர் François GROS (கிரியாவின் அகராதியிலும் இவர் பங்களிப்பு உண்டு) பரிபாடலை 1968 இலும், காமத்துப்பாலை 1992 இலும் பிரெஞ்சில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். திருவிளையாடற்புராணம், ஆண்டாள் திருப்பாவை, கந்தபுராணம் ஆகியன பேராசிரியர் Jean FILLIOZAT மொழிபெயர்த்திருக்கிறார். சீவகசிந்தாமணி, திருவாசகம், காரைக்காலம்மையார், தாயுமானவர், ஆகியனவும் பிரெஞ்சில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. இதேபோல் பிரெஞ்சிலிருந்து தமிழுக்கும் மோலிரின் Le bourgeois gentilhomme என்பது புதுப்பணக்காரன் எனவும், இயூகோ வின் Les Misérables ஏழைபடும் பாடு என சுத்தானந்த பாரதியாலும், Thrèse என்பது திரேசா எனவும் குயிலன் என்பவராலும், Exupery இன் Petit Prince என்பது குட்டி இளவரசன், Albert Camus இன் L'Etranger என்பது அந்நியன் ஸ்ரீராமாலும் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டு தமிழுக்கு வரவாகியிருக்கின்றன.

## ஒற்றுமை – வேற்றுமைக்கூறுகள்:

### ஒற்றுமைகள் :

தமிழ், பிரெஞ்சு மொழிகளில் முதலெழுத்துகள் ஒரே ஒலி உடையன.

தமிழ் : அ பிரெஞ்சு : a

இரு மொழிகளிலும் சிறப்பெழுத்துகள் உண்டு.

தமிழ் : ழ பிரெஞ்சு : j

இவ்விரு மொழிகளிலும் இரண்டைக்குறிக்கும் சொற்களின் ஒலி உகரத்தில் (உ) முடிகிறது.

தமிழ் : இரண்டு. ட் + உ

பிரெஞ்சு : deux ட்த் + இ+ உ

இரண்டு மொழிகளிலும் படர்க்கைப் பெயரிலும் வினையிலும் பால்பாகுபாடு காணப்படுகிறது.

தமிழ் : அவன் வந்தான். அவள் வந்தாள்.

பிரெஞ்சு : Il est venu. Elle est venue.

இரு மொழிகளிலும் அண்மைச்சுட்டு இகரமாகவும், சேய்மைச்சுட்டு அகரமாகவும் இருக்கிறது.

தமிழ் : இங்கே. இவன். இவள். இது.

பிரெஞ்சு : Ici, celui–ci,celle–ci, ceci.

அங்கே. அவன். அவள். அது.

Là, celui-là, celle-là, celà

இ ர ண் டு மொ ழி க ளி லு ம் பிறமொழிக்காரர்கள் இலக்கணம் எழுதியிருக்கிறார்கள். தமிழ் : Costanzo Giuseppe Beschi – இத்தாலியர். பிரெஞ்சு: John Palsgrave ஆங்கிலேயர்.

இரண்டு மொழிகளிலும் இருமொழி அகராதிகளை உருவாக்கியவர்கள் பிறமொழிக்காரர்கள்.

தமிழ் : Antao de Proença – போர்த்துக்கேயர். பிரெஞ்சு : Ambrogio Calepino –இத்தாலியர்.

இம்மொழிகள் பிறமொழிச் சொற்கள் கடன்வாங்கப்படுவதை எதிர்க்கின்றன.

## வேற்றுமைகள் :

தமிழில் உயிர் ஒலியன்களில் குறில், நெடில் வேறுபாடு காணப்படுகிறது. ஆனால் பிரெஞ்சில் அவ்வவ் குறில் உயிர்களுக்கு அசைக்குறிகளைச் சேர்த்து நெடிலொலிகள் ஆக்கப்படுகின்றன.

தமிழ் : அ – ஆ, இ – ஈ.

பிரெஞ்சு : a - à , i - i

பிரெஞ்சில் உள்ள s, z, h, f என்ற உரவொலிகள் தமிழில் ஒலியன்களாக இல்லை.

பிரெஞ்சிய எழுத்துகள் பால் காட்டும் தன்மையில் தமிழிலிலிருந்து வேறுபடுகின்றன. a,b,c,d,e,g,i,j,k,o,p,q,t,u,v,w,y,z ஆகியன ஆண்பால் எழுத்துகளாகவும், f,h,l,m,n,,r,s,x ஆகியன பெண்பால் எழுத்துகளாகவும் உள்ளன.

தமிழின் சிறப்பெழுத்தாக ழ வுடன் ஒப்பிடக்கூடிய எழுத்தாகப் பிரெஞ்சில் த உள்ளது.

இலக்கணப்பாகுபாடு தமிழில் நான்கு வகை, ஆனால் பிரெஞ்சில் எட்டு வகை. தமிழ் : பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல். பிரெஞ்சு: பெயர்ச்சொல் – le nom, சார்புச்சொல் – l'article, பதிலிடுபெயர் – le pronom, பெயரடை – l'adjectif, வினைச்சொல் – le verbe, வினையடை – l'adverbe, முன்னிடைச்சொல் – la préposition, கூட்டிடைச்சொல் – la conjonction.

பிரெஞ்சில் அனைத்து அஃறிணைச்சொற்களும் ஆண்பால் – பெண்பால் காட்டுகின்றன.

தமிழ் : பால்காட்டுவதில்லை, பிரெஞ்சு : un stylo – பேனா, une clé – சாவி. le soleil– சூரியன், la lune – சந்திரன்.

தமிழின் படர்க்கைப்பெயர்கள் பால்காட்டும் தன்மையில் வேறுபடுகின்றன.

தமிழ் : அவர்கள், அவை பால்காட்டுவதில்லை,

பிரெஞ்சு : ils, elles பால்காட்டுகின்றன.

## வேற்றுமை முக்கியத்துவம்.

தமிழ் : உண்டு

பிரெஞ்சு : இல்லை

பிரெஞ்சில் ஒருமையும் பன்மையும் தெளிவாகக் காட்டப்படுகின்றன. தமிழில் பெரும்பாலும் அஃறிணைப்பெயர்களுடன் பன்மை விகுதிகள் பெரும்பாலும் வழங்குவதில்லை.

தமிழ் : ஒரு நாய் – பத்து நாய் பிரெஞ்சு : Un chien – dix chiens

தமிழில் பின்னுருபுகளாக வரும் இடங்களில் பிரெஞ்சில் பின்னுருபுகள் வருகின்றன.

தமிழ் : தஞ்சாவூருக்கு, பாரிசில். பிரெஞ்சு : à Tanjavur. A Paris

இரு மொழிகளிலும் செயப்பாட்டு வினை இருந்தாலும், தமிழில் தனிவடிவம் இல்லை. படு எனும் துணைவினையே அதனை அமைக்கிறது. ஆனால் பிரெஞ்சில் அதற்குத் தனிவடிவம் உண்டு.

தமிழ் : தமிழ் பிரெஞ்சுக்காரர்களால் படிக்கப்படுகிறது.

பிரெஞ்சு : Le tamoul est appris par les Français.

தமிழில் எதிர்மறை உணர்த்தும் சொல் பகுதிக்கும் விகுதிக்கும் இடையே எதிர்மறை இடைநிலை சேர்த்து வினைச்சொல் அமைகிறது. பிரெஞ்சில் வினைச்சொல்லின் உறுப்பாகாமல் எதிர்மறை உணர்த்தும் இருசொற்கள் வினைக்கு முன்னும் பின்னுமாக இடம்பெறுகின்றன.
தமிழ் : நான் போகவில்லை. அவன் வரான்.

பிரெஞ்சு : Je ne vais pas. Il ne – viendra pas. தமிழில் பின்னுருபுகளாக வரும் இடங்களில் பிரெஞ்சில் பின்னுருபுகள் வருகின்றன.

தமிழ் : தஞ்சாவூருக்கு, பாரிசில்.  பிரெஞ்சு : à Tanjavur. A Paris

இரு மொழிகளிலும் வாக்கிய அமைப்புகள் வேறுபடுகின்றன.




மூலம் : Empires of the Word. Nicholas Ostler.

| மொழிகள் | பேசுவோர் எண்ணிக்கை( மில்லியன்) |
|---|---|
| சீனம், மண்டாரின் | 1052 |
| ஆங்கிலம் | 508 |
| இந்தி | 487 |
| இஸ்பானியம் | 417 |
| ரஷ்யம் | 277 |
| பெங்காலி | 211 |
| போர்த்துக்கேயம் | 191 |
| ஜேர்மன் | 128 |
| பிரெஞ்சு | 128 |
| யப்பானியம் | 126 |
| உருது | 104 |
| கொரியன் | 78 |
| சீனம், வுயு | 77 |

தமிழ் : எழுவாய் + செயப்படுபொருள் + பயனிலை(வினை)

பிரெஞ்சு: எழுவாய் + பயனிலை(வினை) + செயப்படுபொருள்

| | |
|---|---|
| யவனம் | 76 |
| தெலுங்கு | 75 |
| தமிழ் | 74 |
| சீனம், யுய் | 71 |
| மராத்தி | 71 |
| வியட்நாமியன் | 68 |
| துருக்கியம் | 61 |

முதல் இருபது உச்சநிலை மொழிகளில் பிரெஞ்சு ஒன்பதாவது இடத்திலும், தமிழ் பதினாறாவது இடத்திலும் உள்ளதாக 2005 இல் வெளியான Nicholas Ostler மொழியியல் வல்லுநரின் Empires of the Word நூலில் உள்ளது. Noam Chomsky இன் மாணவரான இவர் இருபத்தாறு மொழிகளில் அறிவு பெற்றவர். மொழி பேசுவோரின் தொகை அடிப்படையில் பிரான்சில் பிறந்த மொழி மந்தாரின் சீனம், ஆங்கிலம், இந்தி – உருது, அரபு, இஸ்பானியம், ரஷ்யம், பெங்காலி, போர்த்துக்கேயம், இந்தோனீசியம், ஜெர்மன், யப்பானியம் ஆகிய மொழிகளை அடுத்து பன்னிரண்டாவது இடத்தில் இடம்பெறுகிறது. ஐ.நா.வின் முக்கிய மொழிகளில் பிரெஞ்சும் முக்கிய மொழி. சர்வதேசமொழி எனும் நிலையில் ஆங்கிலத்திற்கு அடுத்த இரண்டாம் இடத்தில் இருக்கிறது.

நாளுக்குநாள் உலகில் உள்ள சிறிய மொழிகள் அழிந்தொழிந்து போகும் அபாய நிலை அதிகரிக்கிறது என மொழியியலாளர்கள் அபாயச்சங்கு ஊதுகின்றனர். பதினாறாம் நூற்றாண்டில் 14000 மொழிகள் இருந்தனவென்றும், கடந்த 2006இல் 6900 மொழிகளாகக் குறைந்துவிட்டனவென்றும் Unesco தகவல்களும், The Ethnologue – Summer Institute of Linguistics போன்ற மொழியியல்தரவுகளும் தெரிவிக்கின்றன.உலகில்இப்போது பேசப்படுகின்ற மொழிகளில் 50– 90 % மானவை 2100 இல் மறைந்துவிடலாம் எனவும் கருதப்படுகிறது. ஏனெனில் இம்மொழிகளில் 95% மானவை உலக சனத்தொகையில் 6%தினரால் மட்டுமே பேசப்படுகின்றன. 1900 மொழிகள் ஆயிரத்திற்கும் குறைவான மக்களாலேயே பயன்படுத்தப்படுகிறன. 1300 மொழிகள் 100000 மக்களால் பேசப்படுகின்றன. இவை நீடித்து நிலைக்கக்கூடிய தன்மை இருக்கிறது. இம்மொழிகளில் மொழிகளைப் பிள்ளைகள் பாடசாலைகளில் கற்பது நிறுத்திக்கொள்ளப்படுவதனால் மொழிகள் வழங்கப்படுவது குறைந்து போகின்றது என்கிறது Unesco. முதியவர்கள் பேசுவதனால் மட்டுமே அவர்தம் மொழிகளைப் பாதுகாத்திட முடியாது. மொழிகளின் சொற்தேட்டம், இலக்கணம் போன்றவற்றை கற்கச்செய்வதன் மூலம் மொழிகளைப் பாதுகாக்க மொழியியலாளர்கள் வழிமுறைகள் செய்கிறார்கள். உலகமொழிகளைப் பற்றி பல கருவூல நூல்களைப் படைத்துப் போந்த பல்மொழியியலறிஞர் அகத்தியலிங்கனார் அவர்கள் எந்த மொழியைப்பற்றி ஒரு வரி எழுதினாலும் அந்த மொழியின் அருமையையும் பெருமையையும் மெச்சிய பின்னர்தான் அடுத்தவரியை எழுதும் உயர்பண்பாளர். அவரை நினைவுகூருவது தமிழுக்கும் மொழிகளுக்கும் நன்றியுணர்வுடன் நாம் புரியும் மொழித்தொண்டு ஆகும்.

## துணைநூல்கள் :


| | | |
|---|---|---|
| 01. ச. அகத்தியலிங்கம். | தமிழ் மொழி அமைப்பியல். | 2002 |
| 02. ச. அகத்தியலிங்கம். | திராவிட மொழிகள். 1,2 | 2000 |
| 03. ச. அகத்தியலிங்கம். | இந்திய மொழிகள். | 2000 |
| 04. ச. அகத்தியலிங்கம். | உலக மொழிகள். | 1974 |
| 05. எச். சித்திரபுத்திரன். | சொல்லும் பொருளும் | 2004 |
| 06 ச. சச்சிதானந்தம். | பிரான்ஸ் நாடும் பிரெஞ்சு மக்களும். | 1997 |
| 07. Nicholas Ostler: | Empires of the Word. | 2005 |
| 08. Merritt Ruhlen. | The Origin of Language | 1994 |
| 09. B. Valette, D.Giovacchini, C.Audier. | Anthologie de la litterature francaise | 1989 |
| 10. Science & Vie. | octobre | 2006 |
| 11. La bataille des langues | Le Monde. Février - mars | 2008 |

# Tracing the Trajectory of Linguistic changes in Tamil: Mining the corpus of Tamil Texts

Vasu Renganathan
University of Pennsylvania

Continuation of previous issue

## Appellative Verbs:

When tense is marked covertly in a verb, it is called an 'appellative verb' [15]. Tolkappiyam calls regular verbs with tense as vinai and the appellative verbs as kurippu vinai. Both medieval and old Tamil shows many occurrences of appellative verbs, but in modern Tamil, only very few verbs take tense covertly. Tolkappiyar groups two types of appellative verbs, and they are a) appellative verbs of rational class and b) appellative verbs non-rational class. The rational class of verbs take human person, number and

gender suffix, where as the non-rational class verbs take the neuter suffixes. Examples for rational class of appellative verbs include purattanan 'outside person', nilattanan 'one who possess the land', allan non-existent-he', ilan 'not-he', ila! 'not-she', ulal 'exist-she', ular 'exist-he' etc. The examples for irrational class of appellative verbs include inru 'not-thing', utaiya 'that which posses', utaittu 'that which possess' etc. Caldwell (1961) notes that the class of forms such as nallatu 'good thing', nallar 'good person - epicene' etc., as appellative nouns (p. 479).

Except for a very minimum number of appellative nouns such as nal 'good', nanru 'good thing' etc., most of the appellative verbs. as cited above, are obsolete in modern Tamil. This implies the fact that there must have been of less use in medieval Tamil than old Tamil.. But an attempt to search the corpus of text from these three periods shows that these verbs exist abundantly only in Cankam Tamil, but not as many in medieval Tamil text. In this respect, one can conclude that both medieval and modern Tamil do not exhibit much difference as far as the use of appellative verbs are concerned. Caldwell (1961, p. 479) also notes that the appellative noun is more commonly used in the classical dialect of the modern Tamil than in the colloquial dialect.

## Participial Nouns

As in the case of aspectual system, the participial noun formation is found to be a well developed system in all of the three stages of Tamil. However, all of these three stages differ from each other in the way the participial nouns are formed. Annamalai (1972) with a detailed study of the participial nouns as used in modern Tamil identifies the participial nouns as the ones with the suffixes -avan (varu-kir-avan 'he who comes'), -ava! (varukiraval 'girl who comes') and -atu (va-nt-atu 'that which came'). One can further reanalyze these suffixes as having the suffix -a with person number gender suffixes, where the suffix -a is to be considered as relative participle marker. This structure, however, is not attested either in old Tamil or in medieval Tamil. Rather, in old Tamil the suffixes -ōm (nāṭṭōm 'inhabitants of the country'), -ōr (vant-ōr 'those who came'), -ār (uṭaiyār 'he who possesses), etc., are used on a very regular fashion, besides some of the very restricted type suffixes such as -mar (irupatinmar 'twenty people') and -ana (pālana - 'portion-that'). [16]

Also note that in old Tamil these suffixes are also used with nouns, as shown here. Same is the case with medieval Tamil, except for the fact that the modern Tamil suffixes -an, -al, -ar etc., are used in medieval Tamil only with words that do not take tense, like negative participial nouns, adjectival nouns etc. (E.g. ariyātav-an ‘one who doesn’t know’, mārpin-an ‘the person chest’). The old Tamil suffixes such -ōr (mitant or ‘one who floats’) and -mār (maṭantaimār ‘those who are illiterates’) are also used widely in medieval Tamil. What it suggests is that medieval Tamil shows some of the features that are current both in modern Tamil as well as in old Tamil. This means that medieval Tamil retains not only the newly developed forms, and also the ones from old Tamil.

This is similar to what we discussed earlier in the context of the use of the conditional suffixes -al and -in.

## Case system

Case system is one of the complex structures of Tamil and one finds it more complex in old Tamil than in the other two genres. This is because many post positional forms are used in Cankam Tamil in place of case suffixes. In medieval and modern Tamil the case system has under ent many changes both in terms of restricting the number of suffixes to be used for each case, and also in terms of avoiding redundancies. To cite one example, medieval Tamil has a set of suffixes, what are called cariyai by traditional Tamil grammarians. The language of old and medieval Tamil used them along with the case markers, as in at-an-ai ‘that-an-obj.’. The suffix -an here does not have any function of its own, except for maintaining meter in poems. There are more number of cariyais found in old Tamil than in medieval Tamil. However, in the case system of literary language of modern Tamil, these suffixes are retained in order to maintain the aesthetics of the language. In some case forms, like in genitive, both case suffixes and the cãriyai are used to mark the possessive’ meaning. Thus, the word maratt-in-utaiya ‘tree-in-gen. - of the tree’ can be expressed in modern Tamil either as mara-tt-in or maratt-in-utaiya, thus creating a redundancy. The modern spoken Tamil, however, avoided such redundancies, and all of the cãriyais are eliminated altogether. This type of linguistic change had occurred in medieval Tamil in some sense. Medieval Tamil eliminated many of the postpositional suffixes that were used in Cankam Tamil. Rajam (1992, p. 306) lists around fifty different case markers and postpositional forms that she claims are used in Cankam Tamil. Most of the suffixes that she includes are particles that can occur independently of the case system. For example, one of the locative markers that she lists under case suffixes is ayal, which literally means ‘vicinity’. The sentence malai ayal means ‘by the side of the mountain’. According to Rajam, it is a postpositional phrase in old Tamil. Agesthialingom and Shanmugam (1970), for example, lists only twenty three case markers and postpositions that they consider are used in the Tamil of the Pallava period, which is the beginning of the language of bhakti.

Phonological Reduction, Reanalysis and formation the modal auxiliary -lām:

Development of the modal auxiliary suffix -lām in Tamil requires special attention in the sense that it is one of the grammaticalization processes namely ‘reanalysis’ was responsible for the formation of this suffix in modern Tamil (See Renganathan, 2010). Like the process of metaphorization which is accompanied by the process of reanalysis, cases of phonological reduction of lexical forms also tend to cause the process of reanalysis and subsequently to emergence of new morphological form. Hopper and Traugott (1993:345) illustrate this phenomenon with examples from Turkish, Maori etc., where certain phonological change within lexical words lead to morphologization. Tirumantiram text shows evidences of utterances where probability meaning is understood at clausal level with a combination of verbal noun with the suffix -al and the verb akum ‘s.t. would become’.

āṇavam nīnkā tavar enalākumē (enal ākumē - origianl form)

Ego rid of those say become

One might be called those without getting rid of the ego (Tirum: 398:4)

neñcena nīnkā nilai peralākumē (peralākumē)

Heart that rid of state obtain become

One might obtain a state with everything rid of from heart (Tirum: 2719:4)

talaipaṭa lākum tarumamum tānē (paṭa lākumē - reanalyzed)

Dominant become faith indeed

Faith might get the dominant position indeed (Tirum: 2666:4)

Correspondingly, the verb akum shows a variant of amē with a phonological simplification of dropping ku. Expressions with this variant are deemed to be synonymous to the corresponding forms without phonological reduction.

tānē taṭavarai tan kaṭal āmē (phonological reduction)

Self realize to self succeed become

Those who can realize themselves can succeed from one's own self

(Tirum: 10:4)

appari cīcan arul peral āmē (peral āmē - reanalysis/phonological reduction)

That Lord grace obtain become

One might get the grace of the Lord (Tirum: 36:4)

karai pacu pācam kaṭantu eytal āmē (eytalāmē - phonological reduction)

Stain soul affinity surpass attain become

One might get a state surpassing sin, selfishness and other worldly affections (Tirum: 49:4)

While the form āmē occurs with a noun, it is understood with a similar meaning of 'would it become' as in the examples shown above. As a result of the phonological reduction from ākum > ām, the process of reanalysis of the structure [verbal noun + al + akum] to [Inf. of verb + lam] has taken place historically, which presumably pass through the verbal noun construction (ex. varal + ākum) into an intermediate construction (ex. vara + lām) after a change from ākum to ām.

Similar cases of occurrences with ākum is found to be occurring in Divyaprabandam, which belongs to medieval Tamil and in Aingurunuru, which belongs to Sangam Tamil.

mukti murra lākumē

Salvation obtain might become

One might obtain the salvation (Divyaprabandam: 830:8)

mararāka lākumē

forget become

One might forget (Divyaprabandam: 831:8)

irai nekir cellal ākum annay

King kind go become, Madam

Oh! Madam! One might reach the heart of the king. (Aing. 25:4)

A search of the forms ākum and ām occurring with verbal noun form with the suffix -al indicates that Cankam Tamil does not show any occurrences with phonological reduction. Similarly, only in Tirumantiram among the medieval texts does one find instances of these examples in a relatively larger number of cases. This forces us to conclude that the process of phonological reduction of ākum to ām and correspondingly the process of reanalysis leading to morphologization of the suffix lām must have taken place during the time of Tirumantiram. It is worth to note here that the forms like pārkkalākum 'it is possible to see', koṭkkalākum 'it is possible to give' etc., along with their synonymous forms such

as pārkkalām and koṭkkalām respectively are still used in restricted contexts such as scholarly writings, historical novels etc. This phenonemonon may also be considred as a case of wrong segmentation of morphological form followed by wider popularization in modern Tamil grammars in the sense that instead of segmentation of these forms as verbal noun with -al + ākum (ām), the grammars misrepresented it as infinitive form with -a + lām[17].

## The trajectory:

The well developed structure of present day Tamil constitutes mainly two types of verb forms in large part namely infinitive based verbs and verbal participle based verbs. Verb forms with infinitive as base are found to be attested more in number only starting from post-medieval period when Saiva Siddanta and Vaishnava religious texts were composed in abundance. However, the forms with infinitive form of a verb and the auxiliary vēntum with the meaning 'need' occur more commonly during the medieval period than the other modal forms such as the ones with mutiyum (can) and lām (may). Even though the word mutiyum (can) is attested in abundance as a main verb in medieval and Cankam periods, its use as modal form is attested in rare numbers only in religious texts. Thus, it may be understood that the structure of Verb + ventum must have been developed first followed by the other modal forms. Perhaps, this could be because the structure with

vēntum 'need/should' has more relevance in the context of religious texts than its counterpart Verb + mutiyum, which mainly denotes one's capability. This makes one to believe that 'making a request to god'; and 'asking for favors' by devotees should have been more common than proclaiming god's abilities. Thus, when one attempts to draw the line of progression for the development of modal forms in Tamil, the following may be considred.

1) Infinitive form of verb + vēntum 'need' attested more from medieval period onwards.

2) Infinitive form of verb + mutiyum 'capability' - attested more in post-medieval period onwards.

3) Infinitive form of verb + lām 'possibility' - attested only in Modern Tamil and very infrequently in medieval Tamil.

Similarly, development of aspectual forms may be considered to belong to the following sequence:

1) Verbal participle + kontu - attested in a very few cases in Cankam texts and less in number in medieval texts.

2) Verbal participle + konṭiru - attested very rarely in medieval Tamil. 3) Verbal participle + itu - attested largely in medieval Tamil, but not in Cankam and modern Tamil.

4) Verbal participle + vitu - attested largely in modern Tamil.

## Concluding remarks:

Language of bhakti contributes in a large scale to the changes in many of the linguistic forms that were either used less frequently or not used at all in Cankam Tamil. Majority of the changes occurred mostly due to the works of poet saints who employed religious content with enormous borrowings from Sanskrit. Excessive use of Sanskrit words and incorporating religious themes, as opposed to the earlier didactic themes, led to both simplification and enlargement of the language. The language was simplified in the sense that most of the redundancies as in the use of case forms, and negative markers were eliminated and it underwent enlargement both at lexical and morphological levels in the sense that many new grammatical categories came into existence, as in the case of formation of aspectual auxiliary kontu, present tense suffix -kinru., the modal auxiliary lām and so on. Further, the borrowed words in their nativized form led to restructuring of existing lexicon as well as morphological structures. Mining the corpus of electronic texts from Cankam to modern Tamil allows us to identify the trajectory of the linguistic changes that occurred through the three genres namely Cankam, medieval and modern Tamil.

15 It was Caldwell (1961, p. 477) who termed this type of verbs as 'appellative' verbs.

16 Cf. Zvelebil (1970, p. 33-34).

17 Caldwell (1961:537-38) recognizes that -al is an alternative form of infinitive suffix -a in Tamil.

## References


Agesthialigom, S. and S. V. Shanmugam. 1970. Tamil Inscriptions. Annamalai Nagar: Annamalai University.

Annamalai, E. 1972. The Participial Noun in Tamil, In Third Seminar on Dravidian Linguistics, S. Agesthialingom and S. V. Shanmugam (eds.), Annamalai Nagar: Annamalai University.

Annamalai, E. 1979. Movement for Linguistic Purism: The Case of Tamil, In Language Movements in India, Annamalai, E. (ed.), Mysore: CIIL.

Annamalai, E. 1985. Dynamics of Verbal Extension in Tamil. Trivandrum: DLA.

Arden, A. H. (1942) A Progressive Grammar of the Tamil Language. Madras, Christian Literature Society.

Caldwell, Robert. 1961. A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages. Madras: University of Madras.

Burrow, T. and M. B. Emeneau. 1968. Dravidian Etymological Dictionary: Supplement, Oxford: Oxford University Press.

1984. A Dravidian Etymological Dictionary (2nd edition), Oxford: Clarenden

Press.

Emeneau, Murray B. 1954. Linguistic Prehistory of India, Proceedings of the American Philosophical Socieity, Vol. 98, No. 4. (Aug. 16, 1954), pp. 282-292.

Rajam, V. S. 1992. A reference grammar of classical Tamil poetry (150 B.C.--prefifth/sixth century A.D.), Philadelphia: American Philosophical Society.

Renganathan, Vasu. (2010). The Language of Tirumular's Tirumantiram: A Medieval Saiva Religious Text. Ph.D. Dissertation, University of Pennsylvania, Philadelphia, USA.

Schiffman, Harold F. 2005. The Grammaticalization of Aspect in Tamil, and its Semantic Sources. In S. Mufwene, R. Wheeler et al., (eds.), Polymorphous Linguistics: Jim McCawley's Legacy. Cambridge: MIT Press.

Shanmugam, S. V. 1995. Manivāsakar tamir . (Tamil). Journal of Tamil Studies. 47 & 48. Pp. 52-83. Chennai: International Institute of Tamil Studies.

Sundaram, Meenakshi. 1965. A History of Tamil language. Poona: Deccan College.

Tirumantiram. (source text) A.S. Jnanasambandan (ed.). 2002. Chennai: Sivasakthi Printers.

Vaidyanathan, S. 1971. Indo-Aryan Loan words in Old Tamil. Madras: Rajan Publishers.

Varadarajan, M. 1972. Tamir ilakkiya varalāru. (History of Tamil literature). New Delhi: Sahitya Academy.

Zvelebil, Kamil V. 1970. Introduction to the historical grammar of the Tamil language.

Zvelebil, Kamil V. 1971. The Present Tense Morph in Tamil, Journal of the American Oriental Society, Vol. 91, No. 3. (Jul. – Sep.), pp. 442-445.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 129–ஆவது கூட்டம்




07.03.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 129–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட மொழிவல்லுநர் முனைவர் மு. கண்ணன், திரு. ஆ. அரிமாப் பாமகன், நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும்அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 256 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 130–ஆவது கூட்டம்




08.03.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 130–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். திரு.ஆ. அரிமாப்பாமகன், நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும்அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 306 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# வணிகவரித்துறை ஆணையரகத்தில் துறைசார் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம்!





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், 09.03.2023ஆம் நாள், வணிகவரித்துறை ஆணையரகத்தில் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம் நடைபெற்றது. சென்னை, எழிலகத்தில் அமைந்துள்ள வணிகவரித்துறை ஆணையரகக் கருத்தரங்கக் கூடத்தில் நடைபெற்ற இக்கூட்டத்திற்கு, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமை வகித்தார். கூட்டத்தில், வணிகவரித்துறை ஆணையரக உதவி ஆணையர்கள் ந.வெ. நாகராஜன், சோ.பிரகாஷ், மு. நளினி, பா.ரா. ரேஷ்மி, வணிகவரி அலுவலர்கள் கோ. ரேவதி, சொ. சீனிவாசன், கண்காணிப்பாளர் கு. பத்மினி உள்பட பலர் பங்கேற்று, துறைசார் கலைச்சொற்கள் குறித்துத் தங்கள் கருத்துரைகளை வழங்கியதோடு, அரசின் இத்திட்டத்தைச் சிறப்பாகச் செயற்படுத்த ஆணையரகம் சார்பில் முழு ஒத்துழைப்பு நல்குவதாகத் தெரிவித்தனர். கூட்டத்தில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர்கள் வே.பிரபு, முனைவர் வே.கார்த்திக் ஆகியோர் கலந்துகொண்டு, திட்டத்தின் நோக்கம் குறித்தும், இயக்ககச் செயற்பாடுகள் குறித்தும் எடுத்துரைத்தனர். கூட்டத்தின்போது இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் ஏ. காந்தி உடனிருந்தார்.

# கோவையில் மருத்துவக் கலைச்சொல் அகராதிக் கருத்தரங்கம்!









செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் உருவாக்கிவரும் மருத்துவக் கலைச்சொல் அகராதி தொடர்பான கருத்தரங்கம் கோவை, பூ.சா.கோ. மருத்துவக் கல்லூரி (ம) ஆராய்ச்சி நிறுவனத்தில் 10.03.2023ஆம் நாள் நடைபெற்றது. 60க்கும் மேற்பட்ட மருத்துவ அறிஞர்களும், மொழி வல்லுநர்களும் பங்கேற்று, மருத்துவக் கலைச்சொல் அகராதி சிறப்புற வெளிவருவதற்கான கருத்துரைகளை வழங்கினார்கள்.

ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்கி வெளியிட வேண்டும் என்ற தமிழ்நாடு அரசின் ஆணைப்படி, அகரமுதலி இயக்ககமானது, தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து, துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்களை அமைத்து, ஆண்டுக்கொரு துறையைத் தேர்வுசெய்து

கலைச்சொல் அகராதிகளை உருவாக்கி வெளியிடவுள்ளது. அதன்படி நடப்பாண்டில் முதற்கட்டமாக மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கப் பணி நடைபெற்று வருகிறது.

இவ்வகராதி தொடர்பாக நடைபெற்ற கருத்தரங்கில், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தம் தலைமை வகித்து, கல்விதான் நமக்கு நிலைத்த புகழைத் தரும். அந்தக் கல்வியை விட சிறந்த செல்வம் வேறு இல்லை. அத்தகைய கல்வியைத் தாய்மொழியில் கற்றால் அறிவு விரிவு பெறும், சிந்தனை ஆற்றல் மிகுதி பெறும். எல்லாக் கல்வியும் சிறந்ததுதான் என்றாலும், மருத்துவக் கல்வி முதன்மையானது. அந்தக் கல்வியைத் தாய்மொழியில் கற்றால் கற்போரின் செயல்திறமும் சிந்தனைத் திறமும் பெருகும் என்ற நோக்கத்தில் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள் மருத்துவக் கல்வியைத் தமிழில் கற்றுத் தருவதற்கான திட்டத்தை அறிவித்துள்ளார். அதற்கான பாடநூல்களைத் தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் கழகம் எழுதி வெளியிட்டு வருகிறது. அந்தவகையில், மருத்துவக் கலைச்சொல் அகராதியைத் தொகுத்து வெளியிடும் பொறுப்பு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. மருத்துவக் கலைச்சொல் அகராதிக்காக இதுவரை 29 ஆயிரத்திற்கும் மேற்பட்ட கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அச்சொற்கள் குறித்துத் துறைசார்ந்த மருத்துவ அறிஞர்களின் கருத்துகளைப் பெறுவதற்காகத் தான் இக்கருத்தரங்கம் என்று தெரிவித்தார். மேலும், அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தில் இதுவரை 8,76,019 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன என்றும்,பேராசிரியர்களும், அறிஞர்களும், மாணவர்களும் அதனைப் பயன்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

நிகழ்வில், பூ.சா.கோ. மருத்துவ அறிவியல் தமிழ்ச் சங்கச் செயலாளர் பேரா. மரு. பெ. இரா. முருகேசன் வரவேற்புரை வழங்க, மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட மொழி வல்லுநர் முனைவர் மு. கண்ணன் அவர்கள் நோக்கவுரையாற்றினார். பூ.சா.கோ. பல்நோக்குச் சிறப்பு சிகிச்சை மருத்துவமனையின் இயக்குநர் பேரா. மரு. ஜே. எஸ். புவனேஸ்வரன் அவர்கள் சிறப்புரையாற்ற, பூ.சா.கோ. மருத்துவக் கல்லூரி (ம) ஆராய்ச்சி நிறுவன முதல்வர் பேரா. மரு. த.ம. சுப்பாராவ் அவர்கள், எந்திர நுண்துவாரவழி நெஞ்சக அறுவை சிகிச்சை (Robotic thoracic Surgery) நெஞ்சக ரோபோ – தமிழில் என்ற நூலை வெளியிட்டு வாழ்த்துரை வழங்கினார்.

கருத்தரங்கில், நீலகிரி அரசு மருத்துவக் கல்லூரி முதல்வர் பேரா. மரு. மனோகரி, திருப்பூர் அரசு மருத்துவக் கல்லூரி முதல்வர் பேரா. மரு. முருகேசன், கோயம்புத்தூர் அரசு மருத்துவக் கல்லூரி முதல்வர் பேரா. மரு. நிர்மலா, பேரா. க. மணி, பேரா. க. கருணாகரன் ஆகியோர் சிறப்பு



விருந்தினர்களாகக் கலந்துகொண்டு, தமிழில் மருத்துவக் கலைச்சொல் அகராதியின் தேவைகள் குறித்து எடுத்துரைத்தனர்.

கருத்தரங்கில் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும், மருத்துவத்துறையின் பல்வேறு பிரிவுகளைச் சார்ந்த மருத்துவ அறிஞர்கள் 45–க்கும் மேற்பட்டோரும், மொழி வல்லுநர்கள் 15–க்கும் மேற்பட்டோரும் கலந்துகொண்டு, மருத்துவக் கலைச்சொல் அகராதிக்காகத் தொகுக்கப்பட்ட கலைச்சொற்கள் மீதான தங்கள் கருத்துரைகளை வழங்கிச் சிறப்பித்தார்கள்.

பூ.சா.கோ. மருத்துவக் கல்லூரி (ம) ஆராய்ச்சி நிறுவனப் பேராசிரியர்கள், தமிழார்வலர்கள், 500க்கும் மேற்றபட்ட மருத்துவ மாணவர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்ட கருத்தரங்கின் நிறைவில், பூ.சா.கோ. கலை (ம) அறிவியல் கல்லூரித் தமிழ்த்துறையைச் சார்ந்த முனைவர் சோ. பத்மாவதி அவர்கள் நன்றி கூறினார். நிகழ்வில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு, பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி ஆகியோர் உடனிருந்தனர்.

## தமிழ் துணை எழுத்துகள்


ா - துணைக்கால் - கா, சா
ள - கொம்புக்கால் - கௌ, ஊ
ா - மடக்கு ஏறுகீற்றுக்கால் - ணா, தா
ெ - ஒற்றைக்கொம்பு - கெ, செ
ே - இரட்டைக்கொம்பு - கே, பே
ை - இணைக்கொம்பு, சங்கிலிக்கொம்பு - கை,
/ - சாய்வுக்கீற்று - ஏ
| - இறங்கு கீற்று - பு, வு
- மடக்கு ஏறு கீற்று - ணு, து
- பின்வளை கீற்று - கூ
- மேல் விலங்கு - கி
- கீழ் விலங்கு - மு, ரு
- இறங்குகீற்றுக் கீழ்விலங்குச்சுழி - கு,
- மேல் விலங்குச் சுழி - கீ, தீ
- கீழ் விலங்குச் சுழி - மூ, ரூ
- பிறைச்சுழி - ஆ

# வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம்

## கோவை மண்டிலம்





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 10.03.2023 ஆம் நாள், வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம் கோயமுத்தூரில் உள்ள பூ.சா.கோ.மருத்துவக் கல்வி ஆராய்ச்சி நிறுவனக் கூட்ட அரங்கத்தில் நடைபெற்றது.

இந்நிகழ்வின் வரவேற்புரையினைக் கோவை மண்டல ஒருங்கிணைப்பாளர் செல்வி. வி.அகிலா வழங்கினார். ஓய்வுபெற்ற ஆசிரியர் தே.ஜெகநாதன் முன்னிலை உரையும், புலவர் கணேசன் தலைமை உரையும், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் திட்ட நோக்கவுரையும் வழங்கிச் சிறப்பித்தனர்.

தமிழறிஞர்கள் தங்களது வட்டார வழக்குச் சொல் கள ஆய்வு குறித்த பட்டறிவுகளைப் பகிர்ந்து சொற்களையும் வழங்கிச் சிறப்பித்தனர். நிகழ்ச்சிக்குப் பூ.சா.கோ. மருத்துவக் கல்வி ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் மருத்துவர். ஜே.எஸ். புவனேஸ்வரன் அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். தொகுப்பாளர் வே.பிரபு நன்றியுரையாற்ற நிகழ்ச்சி சிறப்பாக நிறைவுற்றது.

# வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம்

# சேலம் மண்டிலம்






செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 11.03.2023 ஆம் நாள் வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம் தருமபுரியிலுள்ள சுழற்சங்க (ரோட்டரி ஹால்) மண்டபத்தில் நடைபெற்றது.

இந்நிகழ்வின் வரவேற்புரையினைச் சேலம் மண்டில ஒருங்கிணைப்பாளர் செல்வன் பெ.தம்பிதுரை வழங்க நிகழ்ச்சி இனிதே தொடங்கியது.

தருமபுரி – அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் கு.சிவப்பிரகாசம் அவர்கள் முன்னிலை உரையும், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையுரையும் வழங்கிச் சிறப்பித்தனர்.

மதுரை மாவட்ட கல்வித்துறை இணை இயக்குநர் பொன்.குமார் அவர்கள் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார். தமிழறிஞர்கள் தங்களது வட்டார வழக்குச் சொல்தொகுப்புக் கள ஆய்வு குறித்த பட்டறிவுகளைப் பகிர்ந்து சொற்களையும் வழங்கிச் சிறப்பித்தனர்.

தொகுப்பாளர் வே.பிரபு நன்றியுரையாற்ற நிகழ்ச்சி சிறப்பாக நிறைவுற்றது. நிகழ்வின்போது, இயக்ககப் பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி உள்ளிட்டோர் உடனிருந்தனர்.

# வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம் திருச்சி மண்டிலம்





செந்த மிழ்ச் சொற்பிறப்பியல் அகரமு தலித் திட்ட இயக்ககம் சார்பில் திருவாரூர் திரு. வி.க. அரசு கலைக் கல்லூரியில், வட்டார வழக்குச் சொற் பொருள் அகராதி உருவாக்கம் தொடர்பான மண்டிலக் கூட்டம் புதன்கிழமை நடைபெற்றது.

கூட்டத்தில், திரு.வி.க.அரசுக் கல்லூரி முதல்வர் கோ. கீதா தலைமை வகித்தார். திருவாரூர் தமிழ்ச் சங்கத் தலைவர் இரெ. சண்முகவடிவேலு முன்னிலை வகித்தார். நிகழ்வில், பேச்சாளர் நாகராஜன் பங்கேற்று, திட்டம் குறித்துப் பேசினார். இதில் தமிழறிஞர்கள் பலர் பங்கேற்று, சேகரித்த வட்டார வழக்குச் சொற்கள் குறித்து விளக்கம் அளித்தனர்.

அந்தவகையில், நூற்றுக்கும் மேற்பட்ட புதிய வட்டார வழக்குச் சொற்கள் தொகுக்கப்பட் டன. நிகழ்வில், முதுகலைத் தமிழ் மாணவர்கள் பங்கேற்றுப் பயனடைந்தனர். நிகழ்வில்தி, ருச்சி மண்டில ஒருங்கிணைப்பாளர் வே.து. யோகேஸ்வரன் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

# தேனி அரசு மருத்துவக் கல்லூரியில் மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்டக் கருத்தரங்கம்'







தமிழ்நாடு அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் தேனி அரசு மருத்துவக் கல்லூரியில் 'மருத்துவக் கலைச்சொல் அகராதித் திட்டக் கருத்தரங்கம்' நடைபெற்றது.

இக்கூட்டத்திற்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமை வகித்துப் பேசினார். மருத்துவக் கல்வி இயக்குநர் (சிறப்பு அலுவலர்) மற்றும் தேனி அரசு மருத்துவக் கல்லூரி முதல்வர் மருத்துவர் அழ. மீனாட்சி சுந்தரம் சிறப்புரையாற்றினார்

மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட மொழி வல்லுநர் முனைவர் மு. கண்ணன் நோக்கவுரையாற்றினார். மருத்துவக் கல்லூரி துணை முதல்வர் மருத்துவர் ச. எழிலரசன், நிலைய மருத்துவ அலுவலர் ம. ப. சந்திரா, தேனித் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் எழுத்தாளர் தேனி மு. சுப்பிரமணி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

இந்நிகழ்வில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு, பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி ஆகியோர் கலந்து கொண்டு அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளம் குறித்து விளக்கமளித்தனர்.

முன்னதாக, மருத்துவக் கல்லூரி மருத்துவமனை துணைக் கண்காணிப்பாளர் மருத்துவர் கண்ணன் போஜராஜ் வரவேற்புரையாற்றினார். மருத்துவக் கல்லூரி உடலியங்கியல் துறை விரிவுரையாளர் மருத்துவர் செ. தனலட்சுமி அமுதன் நன்றி தெரிவித்தார். மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர்கள், உதவிப்பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள், செவிலியர்கள் மற்றும் மருத்துவ மாணவர்கள் என 200–க்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர். இந்நிகழ்வில் பங்கேற்றவர்களுக்குச் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.



# மதுரையில் மருத்துவக் கலைச்சொல் அகராதி தொகுப்புத் திட்டக் கருத்தரங்கம்







செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் உருவாக்கிவரும் மருத்துவக் கலைச்சொல் அகராதி தொகுப்புத் திட்டக் கருத்தரங்கம் மதுரை அரசு இராஜாஜி மருத்துவமனை (ம)மருத்துவக் கல்லூரியில் 18.03.2023ஆம் நாள் நடைபெற்றது. 60க்கும் மேற்பட்ட மருத்துவ வல்லுநர்கள் பங்கேற்று, மருத்துவக் கலைச்சொல் அகராதி சிறப்புற வெளிவருவதற்கான கருத்துரைகளைவழங்கினார்கள். கருத்தரங்கில், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையுரையாற்றினார். அப்போது, ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்கி வெளியிட வேண்டும் என்ற தமிழ்நாடு அரசின் ஆணைப்படி, அகரமுதலி இயக்ககமானது, தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து, துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்களை அமைத்து, ஆண்டுக்கொரு துறையைத் தேர்வுசெய்து கலைச்சொல் அகராதிகளை உருவாக்கி வெளியிடவுள்ளது. அதன்படி நடப்பாண்டில் முதற்கட்டமாக மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கப் பணி நடைபெற்று வருகிறது. மேலைநாட்டிலிருந்து மதம் பரப்ப வந்தபோதும், மணித்தமிழால் மனம் ஈர்க்கப்பட்டு, அலோபதி மருத்துவத்தையும் அருந்தமிழில் கற்பிக்க இயலும் என்பதை உணர்ந்து, அதற்கு 1847 ஆம் ஆண்டிலேயே அடித்தளமிட்டு முன்மாதிரியாகச் செயல்பட்டவர் சாமுவேல் பிஸ்கிரின் பாதிரியார். மேலும் இதுதொடர்பாக 30 நூல்களைத் தமிழில் எழுதியுள்ள அப்பெருமகனார், ஈழத்து மண்ணில் 30 மருத்துவர்களுக்குத் தமிழில் அலோபதி மருத்துவத்தைக் கற்பித்ததோடு, தான் இறந்த பிறகு தனது கல்லறையில் "அலோபதி மருத்துவத்தைத் தமிழில் கற்பித்தவன்"என்று பொறிக்கும்படி கேட்டுக்கொண்டார். அதன்படியே அவர் இறந்த பிறகு கூஸ்டன் மாநகரில் அவரது புகழுடம்பு புதைக்கப்பட்ட கல்லறையின் மீது அவ்வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. சொல் வளம் மிக்க தமிழ்மொழியில் மருத்துவத்தைக் கற்பிக்க முடியும் என்று அப்பெருமானார் காட்டிய பாதையில் தொடர்ந்து பல அறிஞர்களும் பயணித்தனர். அந்த முயற்சியின் தொடர்ச்சியாக இன்றைய நிலையில் அந்த வல்லுநர்களின் உழைப்புகளின் சாரங்களை உள்ளடக்கிய முழுத் தொகுப்பாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் மருத்துவக் கலைச்சொல் அகராதி வெளிவர உள்ளது. அந்த அகராதியில் இடம் பெற்றுள்ள சொற்களைத் துறை சார் மருத்துவ வல்லுநர்களைக் கொண்டு தரப்படுத்தும் வகையிலேயே இக்கருத்தரங்கம் நடைபெற்று வருகிறது.தமிழில் மருத்துவக் கல்வியைப் பயிற்றுவிக்கும் தமிழ்நாடு அரசின் இலக்கு வெற்றி பெற இந்தக் கலைச் சொல் அகராதி பெருந்துணையாக இருக்கும். தன் வேரில் இருந்து தானே முளைத்து, தன்வேரிலிருந்து தானே காலத்திற்கேற்றப் புதிய சொற்களாகக் கிளைத்து வளரும் ஆற்றல் கொண்ட தமிழ்மொழி, வேர்ச்சொல் அளவிலும், சொல்லளவிலும், பொருள் நிலையிலும் பல்வேறு பிற மொழிகளுக்கு வேராக விளங்கும் பெருமை கொண்டது என்பார் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள். அத்தகு சிறப்பு கொண்ட தமிழ் மொழியில் மருத்துவக் கலைச்சொற்களுக்கு வறட்சியே கிடையாது. அதனால் விரைவில் மருத்துவக் கல்வி முழுமையாகத் தமிழில் கற்பிக்கப்படும் என்று நம்பிக்கை தெரிவித்தார் மேலும், அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவை வலைத்தளத்தில் இதுவரை 9,02,761 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன என்றும், பேராசிரியர்களும், அறிஞர்களும், மாணவர்களும் அதனைப் பயன்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். நிகழ்வில், மதுரை மருத்துவக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் மரு.அ.இரத்தினவேல் அவர்கள் பங்கேற்றுத் தம் சிறப்புரையில், உயிர் காக்கும் மருத்துவக் கல்வியை உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியில் பயிற்றுவிப்பதற்கு எதுவாகத் தமிழ்நாடு அரசால் முன்னெடுக்கப்படும் மருத்துவக் கலைச்சொல் அகராதி தொகுப்புத் திட்டப் பணிக்கு மொழி வல்லுநர்களும் துறை சார்ந்த வல்லுநர்களும் ஒன்றிணைந்து ஒத்துழைப்பு நல்க வேண்டும் என்று தெரிவித்தார். நிகழ்வில் மதுரை மருத்துவக் கல்லூரியின் காது,மூக்கு, தொண்டை துறைத் தலைவர் பேரா. மரு. தினகரன் வரவேற்புரை வழங்க, மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட மொழிவல்லுநர் முனைவர் மு.கண்ணன் அவர்கள் நோக்கவுரையாற்றினார் நிகழ்வில் குழந்தை நல மருத்துவத்துறைத் தலைவர் மருத்துவர் பாலசங்கர், மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல்துறைத் தலைவர் முனைவர் போ. சத்யமூர்த்தி ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள். நிறைவாக, மதுரை மருத்துவக் கல்லூரித் துணை முதல்வர் பேராசிரியர் மருத்துவர் வெ. தனலட்சுமி அவர்கள் நன்றி உரையாற்றினார்.மதுரை அரசு இராஜாஜி மருத்துவமனை மற்றும் மற்ற கல்லூரிப் பேராசிரியர்கள், தமிழார்வலர்கள், மருத்துவ மாணவர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்ட கருத்தரங்கில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்திக் நெறியாளுகை செய்தார். நிகழ்வில் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு, பதிப்பாசிரியர் கி. தமிழ்மணி ஆகியோர் உடனிருந்தனர்.

# வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம் மதுரை மண்டிலம்



தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்கத்திற்கான மதுரை மண்டிலக் கூட்டம் மதுரை வடக்குமாசி வீதியில் அமைந்துள்ள மணியம்மை மழலையர் தொடக்கப்பள்ளியில் நடைபெற்றது.

கூட்டத்திற்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையேற்க, புரட்சிக்கவிஞர் மன்றத் தலைவர் திரு. பி. வரதராசன், மதுரை– உலகத் தமிழ்ச் சங்க மேனாள் இயக்குநர் முனைவர் க. பசும்பொன், மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் மொழியியல் மற்றும் தொடர்பியல் புலத்தின் மேனாள் துறைத் தலைவர் பேரா. வீ. ரேணுகா தேவி, மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல் துறைத் தலைவர் முனைவர் போ. சத்தியமூர்த்தி ஆகியோர் வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள். திட்டத்திற்கான மதுரை மண்டில ஒருங்கிணைப்பாளர் ஞா. சித்தநாதன் வரவேற்புரை வழங்க, நிறைவாக, அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு நன்றியுரை கூறினார். கூட்டத்தில் தமிழார்வலர்கள் பலர் கலந்துகொண்டு மதுரை வட்டார வழக்குச் சொற்கள் குறித்த தங்களின் கருத்துகளைப் பகிர்ந்துகொண்டனர்.

# வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம்

## திருநெல்வேலி மண்டிலம்







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்கத்திற்கான மண்டிலக் கூட்டம் ஆரல்வாய்மொழி அறிஞர் அண்ணா கல்லூரியில் நடைபெற்றது.

கூட்டத்திற்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையேற்க, சாகித்திய அகாடமி விருது பெற்ற எழுத்தாளர் பொன்னீலன் மற்றும் அறிஞர் அண்ணா கல்லூரியின் செயலாளர் மனக்காவலப் பெருமாள் ஆகியோர் முன்னிலை வகித்தனர். திருநெல்வேலி மண்டில ஒருங்கிணைப்பாளர் பாலசுப்பிரமணியன் அனைவரையும் வரவேற்றார். அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு விளக்க உரையாற்றினார். இதில் கன்னியாகுமரி மாவட்டம் சார்பில் உரையாற்றிய எழுத்தாளர் குமரி ஆதவன் கல்குளம் வட்டம் மக்களின் வழக்கு மொழி குறித்தும், குறும்பனை பெர்வின் நெய்தல் நில மக்களின் வழக்கு மொழி குறித்தும், பிரியதர்ஷினி விளவங்கோடு மக்களின் வழக்கு மொழி குறித்தும் பேசினர்.

# வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்க மண்டிலக் கூட்டம்

## சென்னை மண்டிலம்







செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், சென்னை மண்டில வட்டார வழக்குச் சொல்லகராதி உருவாக்கக் கூட்டம் காஞ்சிபுரம் மாவட்டம் புன்னமை தியாகராசர் உயர்நிலைப் பள்ளியின் கருத்தரங்கக் கூடத்தில் நடைபெற்றது. இதில் சென்னை மண்டில ஒருங்கிணைப்பாளர் திரு.மு.சம்பத்குமார் வரவேற்புரையாற்றினார்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமை உரையாற்றினார். அவர் பேசும்போது, விடுதலைக்கு முன்பு வேற்றுநாட்டவர் படையெடுப்பின் காரணமாகப் பிரெஞ்சு, உருது, டச்சு மற்றும் வடமொழிகள் நிருவாகக் காரணங்களால் மக்கள் பேச்சு மொழியில் கலந்துவிட்டன. இதை மீட்க முடியாமல் தவிப்பில் உள்ளோம். வருவாய்த் துறையில் தாசில்தாரை வட்டாட்சியர் என்றும் சிரசுதாரரைப் பொது மேலாளர் என்றும் அழைத்து வருகிறோம். உலக மொழிகளில் தொழில்நுட்பம் காரணமாக மொழிக் கலப்பும் சொற்களில் வழக்கு மாறுதலும் ஏற்பட்டு வருகிறது. ஏற்கெனவே அடுப்பங்கரையிலும் ஆங்கிலம் நுழைந்து விட்டதால் இன்னும் 20 ஆண்டுகளில் வட்டார வழக்குச் சொற்கள் மறைந்துவிடும் நிலை உள்ளது. எதிர்காலத்தில் வட்டார வழக்குச் சொற்களைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமானால் நாம் அகராதியைப் பார்த்து தான் தெரிந்து கொள்ள முடியும். இந்தச் சூழலில் நம் மொழியில் உயிரோட்டமாய் உள்ளச் சொற்களைத் தொகுத்து ஆவணப்படுத்த வேண்டியது காலத்தின் கட்டாயம். இந்தப் பணி ஆறு மாத காலமாக நடந்து கொண்டு வருகிறது. சென்னையைப் பொறுத்தவரை தமிழ்மொழியானது பல்வேறு மொழிக் கலப்புடன் உள்ளது. இதுவரை 20 ஆயிரத்துக்கும் மேற்பட்ட வட்டார வழக்குச் சொற்களை ஒருங்கிணைப்பாளர்கள் தொகுத்துள்ளனர். இங்கு நடைபெற்ற விசார் கிராமத்தை சேர்ந்த மு. ஜெகனாதன் குழுவினரின் 20 நிமிட பாரதத் தெருக்கூத்துக் கலை நிகழ்ச்சியை நான் பார்த்த போது அதில் 90 விழுக்காடு செந்தமிழ்ச் சொற்கள் இடம் பெற்றிருந்தன. தெருக்கூத்து மூலமாகத் தான் செந்தமிழ்ச் சொற்கள் பரவி வருகின்றன. எனவே இதுபோன்ற கலைகளை நாம் பாதுகாக்க வேண்டும் என்றார். இந்த நிகழ்ச்சியில் மேல் கதிர்பூர் பகுதியைச் சேர்ந்த பஜனைக் குழுவினரின் பாசுரம் நடைபெற்றது. தமிழறிஞர்கள், பேராசிரியர்கள், கலைஞர்கள் மாணவர்கள் உட்பட ஏராளமானோர் கலந்து கொண்ட இந்த நிகழ்ச்சியின் நிறைவாக அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் திரு.வே. பிரபு அவர்கள் நன்றியுரை கூறினார்.

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி ! செல்லம்மாள் மகளிர் கல்லூரி மாணவிகள் பயன்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), கிண்டி, செல்லம்மாள் மகளிர் கல்லூரி மாணவிகளுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்துப்பயிற்சியளிக்கப்பட்டது. சொற்குவை வலைத்தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல் உள்ளிட்டவை குறித்த விழிப்புணர்வை இளைய தலைமுறையினரிடம் விதைக்கும் வகையில், அகரமுதலி இயக்ககத்தில் திங்கள்தோறும் கல்லூரி மாணவர்களுக்கு அகப்பயிற்சி வழங்கப்பட்டுவருகிறது.




அந்தவகையில், 15.03.2023 முதல் 29.03.2023 வரை, கிண்டி – செல்லம்மாள் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறையைச் சார்ந்த 15 மாணவிகளுக்கு அகப்பயிற்சியளிக்கப்பட்டது. 24.03.2023ஆம் நாள் நிகழ்வில், அகரமுதலி இயக்ககத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் கோ. செழியன் அவர்கள் கலந்துகொண்டு, அகப்பயிற்சி பெறும் மாணவிகளுக்குக் கலைச்சொல்லாக்கத்தின் தேவை குறித்தும், கலைச்சொல்லாக்க நெறிமுறைகள் குறித்தும் எடுத்துரைத்துப் பயிற்சியளித்தார். அதனைத் தொடர்ந்து, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன், தொகுப்பாளர்கள் திருமதி ஜெ. சாந்தி, திரு. வே. பிரபு ஆகியோர் மாணவிகளுக்கு வேர்ச்சொல்லாய்வுகள், கலைச்சொல்லாக்கங்கள், தூயதமிழ்ப் பயன்பாடு, அகராதிகளின் தேவை, சொற்குவைப் பயன்பாடு உள்ளிட்டவை குறித்து விளக்கிப் பயிற்சியளித்தனர்.

பயிற்சியின்போது நாள்தோறும் மாணவ–மாணவியர் ஒவ்வொருவரும் 100கலைச்சொற்களைத் தொகுத்து வழங்கிவருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. பயிற்சியை நிறைவுசெய்த மாணவிகளுக்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் அவர்கள் அரசு சான்றிதழ் வழங்கி வாழ்த்துத் தெரிவித்தார்.

# திராவிடமொழிகளில்
# தமிழ் கற்றல் குறுஞ்செயலி !
## விரைவில் வெளியிட அகரமுதலி இயக்ககம் நடவடிக்கை




தமிழைப் பிறமொழியினருக்குக் கற்பிக்கும் வகையில் திராவிட மொழிகள் உட்பட பிற மொழிகளில் பாடநூல்களும் பன்மொழி அகராதியுடன் தமிழ் கற்பிக்கும் குறுஞ்செயலி வடிவமைப்புத் தொடர்பான கூட்டம் 31.03.2023 ஆம் நாள், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் பங்கேற்றுத் தலைமையுரையாற்றினார். அப்போது, தமிழ்மொழியின் இனிமையையும், தமிழ்நாட்டின் பெருமையினையும் மற்ற மொழியினரும் அறிந்துகொள்வதற்கான மொழிப் பாலமாக இருக்கும் இக்குறுஞ்செயலியை விரைவில் உலக மக்களின் பயன்பாட்டிற்கு வழங்கும் வகையில் நாம் அனைவரும் ஒருங்கிணைந்து செயலாற்றிட வேண்டும் என்று கூறினார்.

கூட்டத்தில் கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் திரு. ச. இராஜபாண்டியன் அவர்கள் பங்கேற்று, செயலியின் வடிவமைப்பு மற்றும் செயலாற்றும்விதம் குறித்து விளக்கியுரைத்ததோடு, செயலியில் செய்யப்பட வேண்டிய சீராக்கங்கள் ஏதேனும் இருக்கின்றனவா என்பது குறித்து மொழி வல்லுநர்களிடம் கருத்துகளைக் கேட்டறிந்தார். மேலும், இதில் இடம்பெறும் பத்துப் பாடத்திட்டங்கள் பன்மொழி அறிஞர்கள் குழுவினரால் சீராய்வு செய்யப்பட்டன. இக்கூட்டத்தில் அண்ணாமலை பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மைய மேனாள் இயக்குநர் (ம) பேராசிரியர் முனைவர் நீ.இராஜசேகரன் நாயர், சென்னைப் பல்கலைக்கழகக் கன்னடத் துறைத் தலைவர் முனைவர் தமிழ்ச்செல்வி, கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத்திலிருந்து திரு. க. செழியன், மருத்துவக் கலைச்சொல் அகராதித் திட்ட மொழி வல்லுநர் முனைவர் மு. கண்ணன், பன்மொழி அகராதித் திட்ட ஒருங்கிணைப்பாளர் கி. தமிழ்மணி, அகரமுதலி இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் பங்கேற்றனர்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

நன்று தமிழ் வளர்க! – தமிழ்

நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!

என்றும் தமிழ் வளர்க – கலை

யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக!

– பாவேந்தர் பாரதிதாசன்

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறுதுறைசார்ந்த,பிறமொழிச் சொற்களுக்கு இணையானதமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 76–79 வரையிலான அமர்வுகள் 2023 மார்ச்சு 10, 17, 24, 31, ஏப்பிரல் 06 ஆகிய நாள்களில் நடைபெற்றன. மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்ட இணையவழிப் பயிலரங்கமாக நடைபெற்ற 77ஆவது அமர்வில், சவுதி அரேபியா, மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் பேரா. மரு. மு. செம்மல் அவர்கள் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார். 80ஆவது அமர்வில் இலங்கை யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை மேனாள் தலைவர் பேரா. சி. சிவலிங்ராஜா, அகராதியியல் அறிஞர் பேரா. முனைவர் ச. சச்சிதானந்தம், சென்னை – மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச்சங்க நிறுவனச் செயலாளர் கலைமாமணி முனைவர் சேயோன் ஆகியோர் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தனர். பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 10.03.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. மரு. பால் யோசெஃப்**
மேனாள் பேராசிரியர், கனடா



**திரு. பா. துவாரகன்**
பொறுப்பு அலுவலர்,
யாழ்ப்பாண மருத்துவ அருங்காட்சியகம்,
தொலை மருத்துவப் பிரிவு, இலங்கை



**பேரா. மரு. மு. செம்மல்**
முதன்மை அறிவியல் மதியுரைஞர்,
மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கை,
சவுதி அரேபியா



**முனைவர் கோ. இராமலிங்கம்**
உதவிப் பேராசிரியர்,
மீநுண்ணியல் (ம) தொழில்நுட்பத்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி



**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர், கோயம்புத்தூர்



## 17.03.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

### வாழ்த்துரை

**பேரா. மரு. மு. செம்மல்**
முதன்மை அறிவியல்
மதியுரைஞர்,
மெய்நிகர் அறிவியல்
தமிழிருக்கை, சவுதி அரேபியா




**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம்,
தைவான்



**மரு. மு. குமரேசன்**
காது, மூக்கு, தொண்டை
மருத்துவ வல்லுநர்,
சென்னை



**மரு. முனைவர் சிவா தியாகராஜா**
ஒருங்கிணைப்பாளர்,
வரலாறு (ம) பாரம்பரியப் பிரிவு,
தமிழ்த் தரவல் நடுவம், இங்கிலாந்து



**மரு. பிர்லா பவளம்**
மூத்த உதவிப் பேராசிரியர்,
நரம்பியல் துறை, மதுரை மருத்துவக்
கல்லூரி, மதுரை



**மரு. மேரி கியூரிபால்**
விரிவுரையாளர், ஆக்சுபோர்டு கல்லூரி,
ரொரண்டோ, கனடா



## 24.03.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. முனைவர் பெ.ஹரிபாலன்**
ஹன்யாங் பல்கலைக்கழகம்,
சீயோல், தென்கொரியா



**மரு. க. புன்னகை**
பேராசிரியர் (ம) துறைத்தலைவர்,
மருந்தியல் துறை,
ஸ்ரீ இராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி (ம)
ஆராய்ச்சி நிறுவனம், போரூர்



**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்



**கவிஞர் இர. தேன்மொழி**
தமிழார்வலர், பெங்களூர்



## 31.03.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம்,
மலேசியா



**மருத்துவக் கலாநிதி விக்டர் ஜோண் பிகுராடோ**
கனடா



**திரு. கு. நாராயணசாமி**
துணைத்தலைவர்,
மலேசியத் தமிழ்மொழிக் காப்பகம்,
மலேசியா



**மரு. ஆ. செந்தில்வடிவு**
காது, மூக்கு, தொண்டை
அறுவை சிகிச்சை வல்லுநர்,
சென்னை



**திருமதி இரா. பத்மா**
உதவிப் பேராசிரியர்,
கணினி அறிவியல் துறை,
வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப
உயர் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை



## 06.04.2023ஆம் நாள் நடைபெற்ற 80ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிய அறிஞர்கள்

**பேரா. சி. சிவலிங்கராஜா**
மேனாள் தலைவர், தமிழ்த்துறை,
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்,
இலங்கை



**முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி)
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



**கலைமாமணி முனைவர் சேயோன்**
நிறுவனச் செயலாளர் மயிலைத்
திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம், சென்னை



## 80ஆவது அமர்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**மரு. வ. இரகுராமன்**
மனநல மருத்துவர், கடா



**திரு. நா. சபாநாயகம்**
மேனாள் உதவி கல்விப் பணிப்பாளர்,
இலங்கை



**முனைவர் தமிழ்ப்பரிதி மாரி**
உதவிப் பேராசிரியர்,
இதழியல் (ம) மக்கள் தொடர்பியல் துறை,
பெரியார் பல்கலைக்கழகம், சேலம்



**பொறிஞர் கிருஷ்ணமூர்த்தி**
மேனாள் தலைமைப் பொறியாளர்,
அந்தமான் இலட்சத்தீவுகளின்
துறைமுகத் துறை, சென்னை.



**முனைவர் அ. அகிலா**
இணைப் பேராசிரியர், கணினி அறிவியல்
துறை, வேல்ஸ் அறிவியல் [ம]
தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம்,
சென்னை



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில

**பேரா. மரு. பால் யோசெஃப்**

Bacteria – கோட்டுயிரி

Antigen – எதிரியம் (எதிர்ப்பியம்)

Bronchiole – நுண்மூச்சுக்குழாய்

**பேரா. மரு. மு. செம்மல்**

Aabattoir – அடிதொட்டி

Aabattoir sanitation – இறைச்சிக்கூடத் தூய்மை

Abarthrosis – அசையும் மூட்டு

**திரு. பா. துவாரகன்**

Transfusion medicine – குருதிமாற்று மருத்துவம்

Haematologist – குருதியியல் வல்லுநர்

Base hospital – தள மருத்துவமனை

**முனைவர் கோ. இராமலிங்கம்**

Crystalline size – படிக அளவு

Automic force microscopy – அணுவிசை நுண்ணோக்கி

Nanosensors – மீநுண் உணர்விகள்

**திருமதி வெ. காயத்ரி**

Haircut – கடன்முதல் கழிவு

Banking ombudsman – வைப்பகப் பயனர் குறைதீர்ப்போர்

Electronic signature – மின் ஒப்பம்

**மரு. முனைவர் சிவா தியாகராஜா**

Catatonia – உணர்விழப்பு நிலை

Thought disorder – குழம்பிய சிந்தனைகள்

Lack of drive – ஆற்றல் குறைவு

**மரு. மேரி கியூரிபால்**

Erythroplakia – செம்புரை / செம்படலம்

Ameloblastoma – பற்சிப்பியணுக்கட்டி

Carcinoma – புறஇழைமப் புற்று

**முனைவர் ஜெ. வினாயகம்**

Bromination நெடியமாக்கம்

Bromated நெடியல்

Perbromate நிறைநெடியல்

**மரு. மு. குமரேசன்**

Papilloma – வில்லைக்கட்டி

Sphenoid bone – ஆப்பு எலும்பு

Vocal nodule – குரல்நாண் மொட்டு

**மரு. பிர்லா பவளம்**

Cognition enhancers – அறிதிறன் ஊக்கிகள்

Neuro degenerative – நரம்புதேய்

Psychometry – உள அளவீடு

**பேரா. முனைவர் பெ.ஹரிபாலன்**

Aphonia – குரல் இழப்பு

Anoxia – நீர்நிலை உயிர்வளித் தட்டுப்பாடு

Toxoplasmosis – நச்சு ஊனீர் ஒட்டுண்ணி

**முனைவர் மெய். சித்ரா**

Relique – எலும்பெச்சம்

Pop – பரந்திசை

Discothe – பரந்திசை ஆட்டத்தளம்

**மரு. க. புன்னகை**

Pharmacoeconomics – மருந்துப் பொருளியல்

Sublingual route – நாவடி மருந்து

Transdermal patches – மருந்தொட்டி

**கவிஞர் இர. தேன்மொழி**

Paediatric urology – சேய் சிறுநீரகவியல்

Paediatric neurology – மழலை நரம்பியல்

Obisity clinic – உடலெடை சீரகம்

**திரு. இரா. திருமாவளவன்**

Renew – புதுவல்

Protocol – வரிசையம் / வரைமுறை

Auto gyro – கறங்கூர்தி / கிறுவூர்தி

**திரு. கு. நாராயணசாமி**

Chunking – தொகுப்பாக்கம்

Citation – சீருரை

| | | |
|---|---|---|
| Excellent | – | சால்புமை |

**மருத்துவக் கலாநிதி விக்டர் ஜோண் பிகுராடோ**

| | | |
|---|---|---|
| Atony | – | தசையிளக்கம் |
| Meningitis | – | மூளையுறையழற்சி |
| Breezhaler | – | தூளாக்கியுறிஞ்சி |

**மரு. ஆ. செந்தில்வடிவு**

| | | |
|---|---|---|
| Otitis externa | – | புறச்செவி நுண்தொற்று |
| Cochlea | – | செவிச்சுருள் |
| Myringotomy | – | செவிப்பறைத் துளை |

**திருமதி இரா. பத்மா**

| | | |
|---|---|---|
| Heatmap chart | – | தனலுரு வரைடம் |
| Web scarping | – | வலைச்சுரண்டி |
| Ensembling | – | திறனிணையம் |

**முனைவர் தமிழ்ப்பரிதி மாரி**

| | | |
|---|---|---|
| Page layout | – | பக்கப்புனைவு |
| Pagination | – | பக்கமாக்கம் |
| Page break | – | பக்கமுறிவு |

**மரு. வ. இரகுராமன்**

| | | |
|---|---|---|
| Narcissistic | – | தற்சார்புக் காதல் |
| Dementia | – | அறிவுத்தேய்வு |
| Marital discord | – | மண முறிவு |

**திரு. நா. சபாநாயகம்**

| | | |
|---|---|---|
| Digital signal | – | இலக்க அறிகுறி |
| Critical temperature | – | மாறுநிலை வெப்பநிலை |
| Analog signal | – | தொடர் அறிகுறி |

**பொறிஞர் அந்தமான் கிருஷ்ணமூர்த்தி**

| | | |
|---|---|---|
| Brealwater | – | அலையுடைப்பான் |
| Deluxe cabin | – | மீயேந்து கப்பலறை |
| Sea plane | – | ஆழி வானூர்தி |

**முனைவர் அ. அகிலா**

| | | |
|---|---|---|
| Data sensing | – | தரவு உணர்தல் |
| Data trust | – | தரவு நம்பிக்கை |
| Wearable devices | – | அணிகருவிகள் |

## தமிழ்மொழியின் தனிச்சிறப்பு

பெயர்களை உயர்திணை, அஃறிணை என்று தமிழ் இலக்கண நூலோர் வகுத்த முறை உலகில் வேறு எந்த மொழியிலும் இல்லை. இது தமிழின் தனிச்சிறப்பு. பகுத்தறிவு உடைய உயிர்களே உயர்திணை என்றும்; அந்த நலமற்ற மாவும் மாக்களும் மற்றுமுள்ள பொருள்களும் அஃறிணை என்றும், வகுத்துள்ள முறை தமிழ்ச் சான்றோரின் அறிவுநலச் செம்மைக்குச் சிறந்த சான்றாக உள்ளது.

முனைவர் இராபர்ட்டு கால்டுவெல்